ஆசை ஆசை ஆசை
சிவப்பா பொன்னு வாட்டமா வரனும் ஆசை
ஆசை ஆசை ஆசை
சிவப்பா மாப்பிளை உயராமா இருக்கனும் ஆசை
ஆசை ஆசை ஆசை
பகலும் இரவும் கருப்பு இருக்கட்டுமே
நானும் தோழியும் கருப்பு கருக்கட்டுமே
பகலின் கருப்பு பச்சை கருப்பு
இரவின் கருப்பு நிலவில் கருப்பு
தோழியின் கருப்பின் பிரதிபலிப்பில் ஊதாக்குருவி படபடக்கும்
தலைவி கண்களின் ஒளிவீச்சு தலைவன் வேட்டைக்கு வழிகாட்டும்
மின்மினி கண்மணி மின்மினி மின்மினி கண்மணி மின்மினி

லல்லல்லா லையல்லா லௌவல்லா
ஓஹஹ ஹோ அஹஹ ஹா ஓஹஹ ஹோ
என்னைப்பார் திரும்பிப்பார் என் அழகைப்பார்
பாக்கம போற வேட்டைக்குப்போற பாக்கம போறயே
இருளன் காடன் குறும்பன் என் தலைவிக்கு தலைவன்
காடை கோழி காட்டு முச அவன் வரிப்புலிக்கு வேடன்
பாக்கம போற வேட்டைக்குப்போற பாக்கம போறயே
கண்ணைப்பார் கண்ணீரைப்பார் அவள் அன்பைப்பார்
பாக்கம போற வேட்டைக்குப்போற பாக்கம போறயே
ஓஹஹ ஹோ அஹஹ ஹா ஓஹஹ ஹோ
லல்லலலாலா லல்லலலாலா லல்லலல லா

காதல் மழையில் நனைய மோகத்தீயை அணைக்க
பாலை நிலத்தின் தலைவி மேகத்தை கருக்கி மழையச்செய்து
தாகத்தை தீர்த்தாள் தலைவன் தாகத்தை தீர்த்தாள்
தலைவி காதலில் நனைந்தாள்
அடியே நிறுத்து இது என்ன பாலைவனமா போடி இங்கெருந்து

உச்சி மலையில் அருவிக்கரையில்
அருவி அருவி நீர் அருவி நீரே என் ஆடை
ஆடை ஓடை நீரோடை நீரே என் ஆடை
பாக்கம போடா வேட்டைக்குப்போடா பாக்கம போடா
உச்சி மலையில் அருவிக்கரையில்
பகலின் கருப்பு பச்சை கருப்பு
விழுதை பிடிச்சு ஆடிய ஆட்டம் ஆனந்த ஊஞ்சலாட்டம்
இரவின் கருப்பு நிலவில் கருப்பு
விடாமல் ஆடி விரல்கள் காய்ச்சு அடங்குதே ஆட்டம்
என் காதல் அழுது வீழ்ச்சியில் வீழ்ந்து அடங்குதே ஆட்டம்
காதல் அழுது ஆனந்தம் அழிஞ்சு
அடங்குதே ஆட்டம் ஆடி அடங்குதே ஆட்டம்.

ஆஆஆ ஆஆஆ
தானாய் ஒரு வேட்டை என்னை சாய்க்குதே
அது மானா பஞ்சா என் மூச்சை நிறுத்துதே
அருவி கரையில் தவழும் தென்றல் காத்து
குறிஞ்சி மலர்கள் பூத்து குலுங்கும் வாசம்
காதல் காதல் என்றும் சாதல் இல்லை
மயக்கம் தெளிந்து நினைவு திரும்புதே
மூச்ச அடைச்ச இதழ்கள் விலகுதே
அமுதா தேனா மனம் கேக்குதே
அமுதா தேனா மனம் கேக்குதே -அருள்சந், திருச்சி-25, 12 to 19-04-2022